712

# MALAVICA AND AGNIMITRA

**A TALE IN TAMIL**

FOUNDED ON

**The Sanskrit Drama**

OF

**Kali Dasa.**

Rangoon 17/2/20

---

## மாளவிகாக்கினிமித்திரம்.

காளிதாச மகாகவி

இயற்றிய

சமஸ்கிருத நாடகங்களுள் ஒன்றின் கதை.







1914.

# அறிக்கை.



இந்நூலின் பதிப்பாசிரியர், இதனை வெளிப்படுத்தும் பாத்தியதையை, முன்பாத்தியதை பெற்றிருந்த 'மதிராஸ் ஸ்கூல்புக் அண்ட் வெர்னகுலர் லிட்டரேச்சர் சொஸைட்டி' யாரிடமிருந்து பெற்றுள்ளனர். ஆதலின் பதிப்பாசிரியர் அனுமதியின்றி இந்நூலை, முழுதுமாயினும், ஒரு பாகத்தையாயினும், இதனின் வேறுபோலக் காட்டி மேலுக்குச் சிறிது மாற்றியாயினும் பிரசுரிப்பார் குற்றவாளிகளாகத் துரைத்தனத்தார் தண்டனைக் குட்படுத்தப்படுவார்கள்.

# முகவுரை.



மாளவிகாக்கினிமித்திரம் என்பது சமஸ்கிருதத்தில் காளிதாச மகாகவி செய்த நாடகங்களில் ஒன்று. மாளவிகை அக்கினிமித்திரன் என்னும் இருவரைக்குறித்துச் செய்தநூலாதலால் அந்தப் பெயர் பெற்றது.

இதில் புத்தியும் அன்புமுள்ள மித்திரன் உண்டாயிருந்தால் இஷ்டமான காரியத்தைச் சாதிக்கலாமென்றும், நல்லகுலத்திற் பிறந்தவர்களுடைய மனம் மேலான எண்ணமும் சத்தியந்தவறுமையு முள்ளதென்றும், உத்தமஸ்திரீகள் தம் புருஷருடைய கருத்தறிந்து அதற்கிசைய நடப்பாரென்றும், மற்றவர் தம்மளவு தெரியாமற் பகைப்பாரென்றும், யோக்கியனுயிருப்பவன் எவ்வளவு சுதந்தரமுள்ளவனுயிருந்தாலும் நியாயமானவழியில் தன் காரியத்தைச் சாதிக்கமுயல்வானேயல்லாமல் வேறுவழியில் முயலமாட்டானென்றும், புத்திசாலிகளுக்குத் தக்க தோற்றமுண்டாயிருக்கு மென்றும் இப்படிப்பட்ட நீதிகள் விளங்குகின்றன.

இந்த நாடகத்தலைவனை அக்கினிமித்திர மகாராஜன், சூத்திரஜாதியிற் கலந்த ராஜவம்சத்திலொன்றுகிய சுங்ககுலத்திற் பிறந்தவன். இவனுடைய பிதா புஷ்யமித்திரன். இவன் சந்திரகுப்தவம்சமான மவுரிய குலத்திற் பிறந்த பிருகத்ரதன் என்பவனுக்குச் சேனுதிபதியாயிருந்ததனுல் சேனுபதி என்றும் சொல்லப்படுவான். கடைசியில் இவன் அவ்வரசனைக் கொல்வித்து அந்த ராஜ்யத்தைக் கட்டிக்கொண்டான். இவர்கள் ஆண்ட ராஜ்யம் மகதநாடு; அக்காலத்தில் மாளவநாடும் இதற்கு உட்பட்டிருக்கலா மென்று தோன்றுகிறது. இக்கதை நடந்தகாலம் ஏறக்குறைய 2,000 வருஷத்துக்குக் கிட்டியிருக்கலாம். இந்த நாடகம் அழகான சந்தர்ப்பமுள்ளது.

## இக்கதையில்வரும் ஸ்திரீ புருஷர்களின்

## அட்டவணை.



அக்கினிமித்திரன்—ஓர் அரசன்; கதாநாயகன்.

தாரிணி—இவனுடைய பட்டத்துராணி.

கவுசிகி, அல்லது பரிவிராஜிகை—அரசிக்குத் தருமகதை சொல்லும் சன்னியாசிப்பெண்.

வாஹதகன்—ராஜாவினுடைய மந்திரி.

விதூஷகன், அல்லது கவுதமன்—அரசனுக்குத் துணையான ஆசியகாரன்.

மாளவிகை—அரசன் விரும்பின ராஜகுமாரி; கதாநாயகி.

வகுளாவலிகை—மாளவிகையினுடைய தோழி.

இராவதி—அரசன் இஷ்டநாயகி.

நிபுணிகை—இராவதியினுடைய வேலைக்காரி.

அரதத்தன், கணதாசன்—இவ்விருவரும் நாட்டியம் கற்பிப்பவர்.

மவுத்கலியன்—அரசனிடத்திருக்கும் சேவகன்.

ஜயசேனை—அந்தப்புரத்து முக்கிய காவற்காரி.

நாகரிகை, கவுமுதிகை—இருவரும் அரசியின் முக்கிய வேலைக்காரிகள்.

சமாபிருதிகை—கவுசிகியின் வேலைக்காரி.

மதுகரிகை—தோட்டக்காரி.

சாரசகன்—பணம்கொண்டுபோகிற குள்ளன்.

சங்கீதகன்னியர் இருவர்—விதர்ப்பநாட்டிலிருந்து வந்தவர்கள்.

அரசிகளுடைய பரிவாரங்கள் முதலியோர்.

### கதையில் சிறிது சம்பந்தமுற்றவர்கள்.

வீரசேனன்—அரசிக்கு ஒருவகையான தம்பி.

துருவசித்தி—விஷவைத்தியன்.

யக்கியசேனன்—விதர்ப்பநாட்டரசன்.

மாதவசேனன்—இவனும் விதர்ப்பத்தின் அரசன், மாளவிகையின் தமையன்.

வசுமித்திரன்—அக்கினிமித்திரனுடைய மகன்.

வசுலக்ஷ்மி ,, மகள்.

புஷ்யமித்திரன் ,, தகப்பன்.



# மாளவிகாக்கினிமித்திரம்.

மகதநாட்டைச் சேர்ந்த விதிசாநகரத்தில் அக்கினி மித்திரன் என்று ஓர் அரசன் இருந்தான். அக்காலத்தில் அவனே மேலான அரசன். ஆதலால் விதர்ப்பநாட்டின் ராஜகுமாரனுகிய மாதவசேனன் என்பவன், தன் தங்கை யாகிய மாளவிகை என்பவளை அவன் விரும்பியதறிந்து, அவனுக்குக் கலியாணஞ்செய்து கொடுக்கும்படி வாக்குக் கொடுத்து விதிசாநகரத்துக்குப் போக எத்தனமாயிருக் கையில், அக்காலத்தில் விதர்ப்பநாட்டை ஆண்டுவந்த யக்கியசேனன் என்பவன் அவனைப் பிடித்துக் காவலில் வைத்துவிட்டான். இந்த மாதவ்சேனன் அந்த யக்கிய சேனனுக்குச் சிற்றப்பன் மகன்; ஆதலின் கேவலம் பங் காளிப் பகைமையாலேயே அவனைச் சிறைவைத்தான். அப்போது மாதவசேனனுடைய மந்திரியாயிருந்த சுமதி என்பவன் இந்தச் சங்கடத்திற்கு மாளவிகையைத் தப்பு வித்து, அவளையும் தன்னுடன்பிறந்தாளாகிய கவுசிகி என்பவளையும் இட்டுக்கொண்டு விதிசைக்குச் சென்று, மாதவசேனன் உத்தேசித்தபடிக் கலியாணத்தை நிறை வேற்றவேண்டுமென்று புறப்பட்டுப் போய்க்கொண்டிருக் கையில், ஒருநாள் காட்டிலேயே அஸ்தமனமாகி இருட் டிப்போனபடியால், அங்குத் தங்கிய வழிப்போக்கரான வணிகரோடு அக்காட்டிலேயே படுத்துக்கொள்ள நேரிட் டது. அங்கே திருடர் சிலர் வணிகர் பொருளைக் கொள்ளை

யிட வந்து வீழ்ந்ததனால், சுமதி ஆயுதமெடுத்து அவர்களோடு சிறிதுநேரம் சண்டைசெய்தான். செய்தும், கள்ளர் பலரானதால் மந்திரி தோல்வியடைந்து கடைசியில் கொலைசெய்யப்பட்டான். அவன் தங்கையாகிய கவுசிகியானவள், "பட்டகாலிலே படும் கெட்டகுடியே கெடும்" என்கிறபடி, சங்கடத்தின்மேற் சங்கடம் நேரிட்டதனால் துக்கக்கடலிலாழ்ந்து மூர்ச்சித்துப்போனாள். அதுபற்றி அக்கள்ளர் இவள் இறந்தாளென்று நிச்சயித்து, இளமையாலும் பேதைமையாலும் சோகத்தினாலும் ஒன்றும் தோன்றாமல் புலிதுரத்தின மானைப்போல் வெருளவெருள விழித்துக்கொண்டு வெறித்துநின்ற மாளவிகையைப் பிடித்து, அவள் அணிகளைக் கவர்ந்துகொண்டு, அவளைத் தந்திரமாய் வீரசேனன் வசத்தில் விட்டு ஓடிப்போனார்கள்.

அந்த வீரசேனனானவன் அரசனால் நருமதை யாற்றங்கரையில் ஒரு கோட்டையிலே தன்னெல்லைக் காவலனாக ஏற்படுத்தப்பட்டிருந்தவன். அவன் தன் வசமான மாளவிகையைப் பார்த்து, "இவள் நம்முடைய தமக்கையாருக்குப் பொழுதுபோக்கும் விநோதவேலைக்கு உதவுவாள்" என்று அவளிடம் அனுப்பிவிட்டான். ராணி இவளுடைய ரூபலாவண்யங்களையும் சங்கீத முதலிய கல்வித்திறமையையுங் கண்டு, கணதாசன் என்கிற நாட்டியாசாரியனிடத்தில் ஆட்டம் கற்கவிட்டு, அரசன் இவளைக் கண்டால் விரும்புவானென்று ரகசியமாகவே வைத்திருந்தாள்.

இவள் கதி இப்படியிருக்க, காட்டில் மூர்ச்சை தெளிந்த கவுசிகியானவள் கண்விழித்துப்பார்த்து மாளவிகையைக்காணாமல், அங்கிங்கோடி அலைந்து தேடி, கடைசியில் அவளைப்பற்றி நிராசைசெய்து தன் தமையன்

தேகத்தை எடுத்துக்கொளுத்திவிட்டு, மிக்கவெறுப்போடு விதிசாநகரத்திற்கே சென்று, காஷாயம்பூண்டு ராஜபத்தினிக்குப் புராணாதி தருமங்கள் சொல்லுகிறவளாய்ப் பண்டித கவுசிகி என்றும், * பரிவிராசிகை என்றும் பேர்பெற்று அங்கேயேயிருந்தாள். அவள் அரண்மனையிலே மாளவிகையைக் கண்டும் காலகதியை யோசித்து வெளிப்படுத்தாமல் சும்மா இருந்துவிட்டாள்.

அக்கினிமித்திர மகாராஜன் மாதவசேனன் சிறைப்பட்ட செய்திகேட்டு, அவனைத் தங்கையோடுகூட விட்டுவிடும்படி விதர்ப்பராஜனுக்குக் கடிதம் எழுதினான். அதற்கு அந்த விதர்ப்பராஜன், "மாதவசேனன்மாத்திரமே என்கையில் அகப்பட்டான்; மாளவிகை அகப்படவில்லை. அரசர் பங்காளிகள்மேல் நடப்பது உமக்குத் தெரியாதா? அவசியம் மாதவசேனனை விடுவிக்க வேண்டுமென்று உமக்கு இஷ்டமிருக்கிறபக்ஷத்தில் உம்முடைய காவலிலிருக்கின்ற என் மைத்துனனை விட்டீரேயானால், நான் அவனை விடுவேன்" என்று அக்கினிமித்திரனுக்கு மறுமொழி யனுப்பிவிட்டான். அதைக் கண்டவுடனே விதிசாதிபதி கோபங்கொண்டு தன் மந்திரியை நோக்கி, "என்ன, பார்! விதர்ப்பநாதன் தன்னளவுதெரியாமல் எழுதினான்; அவன் மைத்துனன் நம்மெல்லையில் வந்து அதிக்கிரமஞ்செய்தபடியால் காவலில் வைக்கப்பட்டான்; நிரபராதியானவனையும் அபராதியையும் ஒப்பிட்டுப் பேசலாமா? ஆகையால் அவன் அரசாட்சியைக் கவரும்படி அவன்மேல் வீரசேனனுடைய படையை அனுப்பு" என்று கட்டளையிட, மந்திரியும் அப்படியே செய்துவிட்டான்.

இப்படியிருக்க ஒருநாள் அரசன் தன் தேவியைக் காண அந்தப்புரத்துக்குப் போனபோது அங்கு ஒரு

---

* சன்னியாசிப் பெண்பிள்ளை.

படத்தில் தாரிணியும் அவளுக்கு எதிரில் ஒரு சிறுபெண்ணும் எழுதியிருக்கக்கண்டு, இவள் யாரெனத் தேவியை வினவ, 'அவள் சொல்லாமல் போக்குக்காட்டினதனால் மறுபடி மறுபடி அரசன் நிர்ப்பந்தமாய் வினவினன். வினவியும் அவள் சொல்லாதபோது, வசுலக்ஷ்மி என்கிற அவன் மகள், "இவள் மாளவிகை" என்று சொல்லிவிட்டாள். பின்பு அரசன் அவளை நேரே பார்க்க அவாக்கொண்டு தன்னிடத்தில் ஆசியகாரனயிருக்கிற கவுதமன் என்பவனோடு இச்செய்தியைச் சொன்னன். அந்த ஆசியகாரன், நல்லது ஆகட்டுமென்றுபோய், ஹரதத்தன், கணதாசன் என்கிற நாட்டியாசாரியரிருவர்க்கும் 'நீ தாழ்ந்தவன் நான் உயர்ந்தவன்' என்று ஒருவர்க்கொருவர் பேச்சுவளர்ந்து, அரசனிடம்வந்து சொல்லிக்கொள்ளு மவ்வளவு தூரம் கலகஞ்செய்துவிட்டு ராஜாவுக்கு அச்சங்கதியைத் தெரியப்படுத்தினன். அதுகேட்டு ராஜா சந்தோஷித்து அவனை நோக்கி, "உலகத்தில் எவனும் இடையூறுள்ள காரியத்தைச் சகாயமா யிருப்பவனலேயே பெறவேண்டும். ஒருவன் நல்ல கண்ணுள்ளவனயிருந்தாலும் இருட்டில் விளக்கில்லாமல் ஒரு பொருளையும் காணமாட்டான்" என்று இப்படி அரசனும் ஆசியகாரனும் பேசிக்கொண்டிருக்கையில், அந்த நாட்டியாசாரியரிருவரும் வந்திருப்பதாக வாசற்காப்போன் வந்து சொன்னன். அதற்கு மகாராஜா "அவர்களை உள்ளே வரச்சொல்" என்று உத்தரவுகொடுத்துவிட்டு, விதூஷகனைப் பார்த்து, "நீ உண்டாக்கின நீதிமரம் பூவெடுத்தது போலிருக்கிறதே" என்றான். அதற்கு அவன், "விரைவில் பழமும் பழுக்கும்" என்று சொன்னன். அரசன் உத்தரவுப்படி, நாட்டியங்கற்பிப்போர் இருவரும் ராஜாவைக்கண்டு தங்கள் வழக்கையுஞ்சொல்லி, "மகாப்பிரபுவான தாங்களே நிர்ணயம் ஏற்படுத்த வேண்டும்" என்று

கேட்டுக்கொண்டார்கள். ராஜா அவர்களை நோக்கி, "சரிதான், ஆசாரியர்களே! நான்மாத்திரமிருந்து இந்தக் காரியத்தை நிர்ணயஞ்செய்தால் பக்ஷபாதமென்று குற்றஞ்சொல்லலாகும்; ஏனெனில், என் காதலியாகிய இராவதிக்கு நாட்டியங் கற்பிக்க நான் ஹரதத்தரை வைத்துக் கொண்டிருக்கிறேன்; கணதாசரையோ தேவி தம்மவர்களுக்கு நாட்டியங்கற்பிக்க நேமித்துக்கொண்டிருக்கிறாள்; ஆனதனால் தேவியுங்கூட இருக்கவேண்டும் என்று சொன்னான். அதை நாட்டியாசாரியரிருவரும் ஒத்துக்கொண்டதனால் பண்டித கவுசிகியோடு தாரிணியையும் அழைப்பித்தான்.

இப்படி எல்லாரும் வந்து சபைகூடியபின் ராஜா பண்டித கவுசிகியை நோக்கி, "இந்தப் பரதாசாரியர்களில் ஒருவர் என்னுடையவரும் ஒருவர் தேவியினுடையவருமானதால், நாங்கள் மத்தியஸ்தராயிருப்பது தகாது; ஆனதுபற்றி நீரே மத்தியஸ்தராயிருந்து இவர்களின் தாரதம்மியத்தை விளக்கவேண்டும்" என்றான். அவள் ஆகட்டும் என்று ஒத்துக்கொண்டு, "நான் நிர்ணயாதிகாரத்தில் வைக்கப்பட்டேனாகையால், இப்போது சொல்லவேண்டுவதைச் சொல்லுகிறேன்; மற்றைச் சாஸ்திரங்களைப்போல இந்தச் சாஸ்திரத்தை வாய்மொழியால் பரீக்ஷைசெய்வது உபயோகமற்றது. இதில் அபிநயமே பிரதானமாதலால் அதைக்கொண்டுதான் பரீக்ஷைசெய்ய வேண்டும். இது எனது அபிப்பிராயம்; தேவிமனம் எதுவோ" என்றாள். தாரிணியோ இச்சூதை அறிந்து, "இக்காரியத்தில் நாம்தலையிடுகிறதே தகுதியல்லவென்பது எனது அபிப்பிராயம்" என்றாள். அதைக்கேட்டுக் கணதாசன், "ஒத்தவனால் என்னை அவமானப்படவிடுவது தேவியார்க்குத் தகுதியோ" என்று கிஞ்சித்து வருந்தினான்.

இப்படியிருக்க அரசன், "ஆகில் இப்போ செய்ய வேண்டுவதென்ன? பரிவிராஜிகையார் கட்டளையிடவேண்டும்" என்றுரைக்க: பரிவிராஜிகை, "நம்மைப் பற்றினவர்களின் காரியத்தை நாம் கைசோரவிடலாகாது; கூடிய அளவு அநுகூலமே செய்யவேண்டும். ஆனால் நடக்கத் தக்கதென்னவெனில், இவர்கள் யார்க்குச் சிக்ஷைசொல்லுகிறார்களோ அவர்களாலே இவர்கள் திறமையை அறிய வேண்டும்; ஏனென்றால் ஒருவனுக்கு அபிநயவிதங்கள் தனக்குள்ளே நன்றாய்த் தெரிந்திருக்கும்; மற்றொருவனுக்குப் பிறர்க்கு அவ்வித்தையைக் கற்பிக்குந்திறம் விசேஷமாயிருக்கும்; எவனுக்கு இவ்விரண்டும் ஒத்திருக்கின்றனவோ அவன்தான் நல்ல உபாத்தியாயனென்று கொள்ளத்தக்கவன். இவ்விருவரும் கல்வியில் ஒத்தவரென்று நமக்கு முன்னமே தெரியும்; இனி அறியவேண்டுவது கற்பிக்குந்திறமைதான்; அதற்கு நான் கூறியதே வழி. தேவியார் கருத்தெதுவோ தெரியாது" என்றாள். அப்போது தாரிணியானவள், "கவுசிகியார் பேசியது சரிதான்; ஆனாலும் சிஷ்யை புத்தியில்லையாயிருந்து குருவின் உபதேச முறையைக் கெடுத்துவிட்டால் அது குருவின் குற்றமோ" என்று சொல்ல, அரசன் "ஆம், ஏற்காத சிஷ்யையை வைத்துக் கொள்வது ஆசாரியனுக்குக் குற்றந்தான்" என்று நியாயமெடுத்துப் பேசினான். அதுகேட்டுத் தாரிணி, கணதாசனைப் பார்த்து, "ஐயா, இந்த வீண்வழக்கேன் எமக்கு; இதைவிட்டு ஒழிதல் நல்லது" என்றாள். அப்போ விதூஷகன், "ஆஹா" என்று நகைத்து, "ஓ, கணதாசரே! ராணியாரவர்கள் சொல்வது சரியே. உமக்கு அப்போதப்போது கிடைக்கிற இலட்டு முதலிய உணவுகளைத் தின்றுகொண்டு பொழுதுகழிப்பது நலமாயிருக்க, அதை இழந்துபோக வழியேன் தேடிக்கொள்ளுகிறீர். 'துட்டு பெட்டியில் விழுமா? திட்டு பெட்டியில் விழுமா?' என்

பதுபோல், வருகிற லாபத்தைப் பாரும். ஒருவன் வாயாலே சொல்லுகிற தூஷணையால் என்ன நஷ்டம். பரீக்ஷையில் தோற்றுப்போனீரானால் நஷ்டமாகுமே; இதுதான் தேவியாருடைய கருத்து” என்று கொஞ்சம் பரிகாசமாய்த் தூண்டி விட்டான். விடவே கணதாசன் மனஸ்தாபப்பட்டு, “எப்படியோ நமக்கு ஒரு இடம் கிடைத்ததே, இதுவே போதும் என்று பிறனுடைய தூஷணையை லக்ஷியஞ்செய்யாமல் பொறுத்துக்கொண்டு பிறனோடு தர்க்கத்திற்கு எவன் அஞ்சியிருக்கிறானோ அவன், பிழைப்பையே பெரிதா நினைத்தவனாதலால் கல்வி விற்கும் வணிகனேயன்றி வித்துவானாகமாட்டான். தேவியாரும் என்னை அப்படித்தான் எண்ணினாற்போலிருக்கின்றது” என்று சொன்னான். அதற்கு அரசி, “ஐயா, நான் அப்படி உம்மை இளப்பமாக நினைத்தன்று சொன்னது. உம்முடைய சிஷ்யை சொற்பகாலந்தொடங்கியே கற்பிக்கப்படுகிறதனால் அவளைப் பரீக்ஷைக்குக் கொண்டு வருவது நியாயமல்லவே என்கிற கருத்தாலே தடுக்க முயன்றேன்.” என்று சமாதானப் படுத்தினாள். அது கேட்டுக் கணதாசன், “இதிலேதான் என்திறத்தைக் காட்டுவது எனக்குப்பெருமை” என்றான். அதற்குத்தேவி, “ஆகில் நலமே; மத்தியஸ்தைக்குமுன்பே உங்கள் திறமையைக் காட்டுங்கள்; அதுதான் தக்கது” என்றாள். அது கேட்டுக் கவுசிகியானவள், “எத்தனை சமர்த்தனானாலும் ஒருவனாயிருந்து பரீக்ஷிப்பது நியாயமன்று; ஆதலால் நான் ஒருத்தியாயிருந்து நிர்ணயஞ் செய்யமாட்டேன்; அதிகாரத்தை நான் பெற்றாலும் நீங்களும் சாக்ஷியாயிருக்கவேண்டும்” என்றாள். அது ராணிக்குப் பிரியமாயிராமையால் முகத்தைச் சற்றே கொட்டித் திருப்பினாள். அதை ராஜா பரிவி ராஜிகைக்குக் காட்ட, அவள், “கோபத்திற்குக் காரணமென்ன அம்மா” என்று வினவும்

போது, விதூஷகன், "தேவிக்குத் தன்பக்கம் தோல்வி யடையுமென்கிற எண்ணம் இருக்கிறதுபோல் தோன்று கிறது; ஆகவே, கோபம் காரணமுள்ளதுதானே" எனக் கிண்டிவிட்டான். அதற்காக ராணி, "நீ பெரிய கலகக் காரன்" என்று விதூஷகனையும் கடிந்தாள். இத்தருணத் தில் கணதாசன் தேவியைப் பார்த்து, "சமயத்தில் என் வல்லமையைக் காட்ட நீர் சம்மதிபடாமற்போனால் என்னை நீர் கைவிட்டதாகவே நினைக்கிறேன்" என்று சொல்லி, எழுந்துபோக முயன்றான். அதுகண்டு அரசி, "ஐய, குருவுக்குச் சிஷரிடத்தில் சகல சுதந்தரமுமுண் டாதலால், வேண்டியபடி நடத்திக்கொள்ளலாம்; என் னைக் கேட்கவேண்டுமோ" என்று சமாதானமாய்ப் பேசி, கவுசிகியையும் "நீர் நடத்தவேண்டியதை நடத்தலாம்" என்றாள்.

பிறகு கவுசிகி, "நாட்டியாசாரியர் கூறியபடி முன்பு சன்மிட்டை என்பள் செய்திருக்கிற சலிகம் என்னும் நாடகத்தில் இருவர் சாமர்த்தியமும் காண எனக்கு விருப்பந்தான்" என்ன, யாவரும் ஒத்துக்கொண்டார் கள். மறுபடியும் கவுசிகி அவர்களை நோக்கி "நாட்டிய காலத்தில் அங்கங்கள் போகும் போக்கையும் காண வேண்டுவது ஆவசியகமாதலால், அதிக அலங்காரங்கள் வேண்டாம் என்றாள். அதையும் அவர்கள் அங்கிகரித் துக்கொண்டு போனார்கள். இத்தருணத்தில் தேவி அரசனை நோக்கி: "இவ்வளவு தந்திரச்செய்கை ராஜகாரி யத்தில் இருந்தால் மிக நன்றாயிருக்குமே" என்று சிறிது கடுத்துச்சொல்ல, அரசன்: "என் பிரியநாயகியே! நீ வேறு நினைக்கிறாய்; கற்றவர்களுள் இப்படி ஒருவர்க் கொரு வர் வாதிப்பது இயல்பல்லவோ" என்றான். இவ்வாறு பேசிக்கொண்டிருப்பதற்குள்ளே *பாத்திரங்களோடு ஆசி

* ஆடுகிறவர்கள்.

ரியர் சித்தமாகி மத்தளமுழக்கிச் சங்கிதம் ஆரம்பித்தார்கள். அரசன் அரசி கவுசிகி முதலிய யாவரும் அங்கே போய்க் கூடி, 'யாருடைய ஆட்டத்தை முதலில் பார்க்கிறது' என்கிற கேள்வியொன்றுண்டாக, வயதில் மூத்தமைபற்றிக் கணதாசன் ஆட்டமே முந்தி நடிக்கவேண்டுமென்று நிர்ணயித்தார்கள். ஆனதால், மாளவிகையானவள் முன் குறித்தபடி சன்மிட்டைசெய்த சலிகநாடகத்தில் ஒரு பாட்டையெடுத்துப் பாடிச் சீராய் அபிநயித்தாள்.

அப்பாட்டின் கருத்தாவது:

1. மனமே! நீ விரும்பியவன் சேர எளியவனல்லன்; ஆதலின் அவனிடத்தில் ஆசையை ஒழித்துவிடு.
2. ஓ ஓ, என்னவோ, என் இடது கடைக்கண் துடிக்கின்றது.
3. நெடுங்காலத்துக்கு முன் கண்ட இவன் எப்படி அணுகக்கூடியவன்.
4. நாயகனே, நீ என்னை உன்னிடத்தில் காதலுடையவளென்றும், ஸ்வாதீனமில்லாதவளென்றும் அறிந்துகொள்.

அவ்வபிநயத்தில் அந்தப் பாட்டின் நாலாம் அடியின் பொருளாகிய 'நாயகனே, நான் உன்மேல்காதல் கொண்டிருந்தும் ஸ்வாதீனமற்றவளாய் இருக்கிறேன்; இதை நீ நினைக்கவேண்டும்' என்பதைத் தன் கருத்துப்போலவே குறிப்பித்தாள். சபையார் யாவரும் அவள் பாடியதும் ஆடியதும் ரமணீயமாயிருக்கின்றன வென்று கொண்டாடினார்கள். விதூஷகனோ மாளவிகையைக் கூப்பிட்டு "ஒரு கிரமம் தப்பி நடந்தாய்" என்றான். அவள் அதற்கு அஞ்சி நிற்க, கணதாசன்: "ஐயா, அதை அறிவியுங்கள்; மறுபடியாகிலும் ஆடச்செய்கிறேன்" என்றான். அதற்கு விதூஷகன்: "உங்கள் புத்திக்குப் படாமற்போனதனால் நான்

சொல்லுகிறேன்; முதலில் பிராமண பூசை ஏன் செய்ய வில்லை" யென்ருன். அதுகேட்டுக் கணதாசன்: "இது அரங் கேற்றும்படியல்லவே, பரீக்ஷை செய்தது தானே. ஆனது பற்றிச்சொல்லவில்லை" என்று சொல்ல, கவுதமன்: "ஆகில் நான் சாதகபக்ஷிபோலே வீணுயா காத்திருந்தேன்" என்று சொல்லுகையில், யாவரும் நகைத்துப்போனுர்கள். இது அவளை இன்னம் சிறிது நேரம் அரசன் பார்க்கட்டும் என்று கவுதமன் செய்த மாயம்.

அப்போது ராஜா விதூஷகனோடு ஏகாந்தத்தில் "தோழனே, நான் சித்திரத்தில் இவளைப் பார்த்தபோது இது சிற்பியின் சாதுரியமேயன்றி இப்படிப்பட்ட ரூபம் உலகத்திலிராது என்று எண்ணினேன். இப் போது இவளைப் பிரத்தியக்ஷமாய்ப் பார்க்கையில் அந்தச் சிற்பி சரியாயெழுதுந் திறமையில்லாதவனென்று நினைக்கி றேன்" என்று இப்படிச் சொல்லி அவளுடைய ரூபலா வணியங்களுக்கும் சங்கீத பரத சமற்காரத்திற்கும் வியந்து அதிகமோகங் கொண்டவனுய், "இனி இவளை நான் அடையும்படியான முயற்சியும் உன்னுலேதான் ஆக வேண்டும்" என்று வேண்டிக்கொண்டான்.

பின்பு ஹரதத்தனுடைய நாட்டியத்தைப் பார்ப்பதற் குள்ளே போஜனகால மாய்விட்டதனுல், நாளைக்கு ஆகட்டு மென்று யாவரும் எழுந்துபோய் மறுநாள் இராவதியின் ஆட்டத்தினுலே அவனுடைய திறத்தையும் பார்த்து, "அது தேனுண்டவன் வாய்க்குத் தாழஞ்சாறுபோலிருந்த தனுல், கணதாசனே மேலானவன்" என்று கவுசிகியைக் கொண்டு நிர்ணயஞ் சொல்லிவிட்டார்கள். அரசனுக்கோ தன் இஷ்டம் நிறைவேறச்செய்த இம்முயற்சியில் ஹரதத் தன் ஆட்டம் வேண்டாவெறுப்பா யிருந்தது.

விதூஷகன், தன்னை ராஜா கேட்டுகொண்டதற்காக மாளவிகையின் தோழியாகிய வகுளாவலிகையினிடஞ் சென்று, அரசன் கருத்து இப்படி இருக்கிறதென்றும் அது நிறைவேறினால் மிகுந்த லாபங்கிடைக்குமென்றும் அறிவித்தான். அவளும் உடன்பட்டு, "கோதமரே, மாளவிகைக்கும் இந்நாட்டம் இருப்பதுபோல் காண்கிறது; அதைஅளந்துபார்த்து அவளைஉடன்படுத்தமாட்டுவேன். தேவியாரோ மாளவிகையை வெகு பதனத்தில்வைத்திருக்கிறார்; அதற்கு என்னசெய்யலாம்; சமயம் வாய்க்குமானால் அப்படியே செய்கிறேன்" என்றாள். இச்செய்தியை அரசனுக்கு வந்து சொல்லி அவன் மனதைக் கொஞ்சம் திடப்படுத்தினான்.

இப்படியிருக்கையில் இராவதி என்பவள் அரசனுக்குத் தன் தோழிமூலமாய் நல்ல பூங்கொத்துகளைக் காணிக்கை கொடுத்து "இந்த வசந்தகாலத்தில் உத்தியான வனத்தில் உம்மோடுகூட ஊசலாடிக் களிக்க விரும்புகிறேன்" என்று கேட்டனுப்பினாள்; அதற்கு அரசனும் ஒத்துக்கொண்டான். ஆனதனால் அரசன் தோட்டத்துக்குச் செல்லவேண்டியதாயிற்று. ஆகையால் "தோட்டத்துக்குப்போய் பொழுதுகழிப்போம்வாரும்" என்று கவுதமன் அழைத்தான். அதற்கு அரசன் அவனைநோக்கி "இயற்கையால் புத்தி நுட்பமுள்ளவர்கள் பெண்கள்; ஆதலின் பிறவிடத்து மனப்பற்றுள்ளவரா யிருக்கிறோமென்பதை எளிதில் அறிந்துகொள்வார்கள். அவளுக்கு நாம் வாக்குத்தத்தஞ்செய்த சிநேகத்தைத் தவிர்வதற்குப் பலகாரணங்களை ஏற்படுத்தலாமேயன்றி, மனப்பிடிப்பில்லாமல் மேலுக்கு அவளோடு நேசம் பாராட்டுவது பகைமைக்கே ஏதுவாகும்" என்று இப்படிச் சொல்லியும், விதூஷகன், "நாம் உத்தியானஞ்சேர்வதே நலம்" என்று உறு

தியாய்ச் சொன்னதனால், ராஜா அவனோடுகூட அவ்விடத்துக்குச் சென்றான்.

விதூஷகன், இராவதியின் நேசத்தைத் திடீரென்று கைவிடப்பார்ப்பது சரியல்லவென்று ராஜாவைத் தோட்டத்திற்கு அழைத்தானேயல்லது, இவனுக்குச் சம்பவிக்கும் ஒரு இஷ்ட சித்தியைப் பற்றியன்று. ஆனால் அது தரித்திரக்கொடுமையால் வீட்டில் தங்க மனம் வெறுத்து அங்கங்கே சென்று காலங்கழிக்கப்பார்த்த ஒருவனுக்கு, போனவிடத்து நிதி கிடைத்தாற்போலாயிற்று. எப்படியென்றால், அந்த வசந்தகாலத்தில் பூக்கவேண்டியதாகிய செவ்வசோகமரம் பூவெடாமலிருந்ததைத் தோட்டக்காரி அரசிக்குத் தெரிவித்து, அதற்கு * தோகதம் கொடுக்க வேண்டுமென்றாள். அசோகமரம் பூப்பதற்கு, நல்ல பருவமுள்ள பெண் காலாலுதைப்பது தோகதம் என்று பயிர் நூலில் சொல்லியிருக்கின்றது. தேவி, தான் போய் அப்படிச் செய்வதற்கு ஊசலிலிருந்து விழுந்து காலில் நோவு தாங்கியிருப்பது பற்றிக் கூடாமற்போனதால், தனக்குப் பதிலாக மாளவிகையை அப்படிச் செய்ய நியமித்தாள். அன்றியும் வகுளாவலிகை கையில் தன் பாதச்சிலம்பைக் கொடுத்து "நீ இதனை மாளவிகைக்கு அணிந்து செம்பஞ் சூட்டித் தோகதத்தை நிறைவேற்றும்படி செய்" எனவும் கட்டளை இட்டதுமன்றி, மாளவிகையைப் பார்த்து, "நீ செய்யுஞ் செய்கையால் அந்த அசோகமரம் ஐந்து நாட்களுக்குள் பூவெடுக்குமானால் உன் இஷ்டத்தை நிறைவேற்றுவேன்" என்றும் சொன்னாள். அந்த உத்தரவின்படி மாளவிகை அத்தோட்டத்தில் வந்து அசோக

---

* செடிகள் பூக்கவும்காய்க்கவும் செழிக்கவுஞ்செய்யத்தக்க ஒரு செய்கை. தமிழில் அதை எரு என்றுதான் சொல்லலாம்.

மரத்தண்டை உட்கார்ந்திருந்தாள். அப்போது விதூஷகன், "அதோ மாளவிகை வந்திருக்கிறாள்; பாரும்" என்று அரசனுக்குக் காட்ட, அவனும் மிக்கவாஞ்சையோடு அவளைப் பார்த்து: "தோழா, இவள் இப்போது கொஞ்சம் வெளுத்துக் காண்கிறாள்; இது என்ன காரணம்?" என்று வினவ: அவன் "இவ்வேறுபாட்டுக்குக் காரணம் நீரே யென்று நினைக்கிறேன்" என: ராஜா சிரித்து, "இது நீ அன்பாற் சொல்லும் பேச்சு" என்றான்.

இப்படிப் பேசிக்கொண் டிருக்கையில் மாளவிகை அரசனிருப்பது தெரியாமல், "தெய்வமே! கிட்டாத பொருளில் என் மனதை ஏவி எத்தனைகாலம் இப்படி என்னைத் துன்பப்படுத்துவாய்!" என்று தனக்குள்ளே சொல்லிக்கொண்டாள். அதை விதூஷகன் அரசனுக்குக்காட்ட: ராஜா, "இது நம்மைக் குறித்ததுதானென்று நிச்சயிக்கக்கூடுமோபோ" என்று ஒரு புதர்மறைவில் தோழனோடு மறைந்திருந்து, என்னநடக்கிறதோ பார்ப்போமென்றிருந்தான்.

இத்தருணத்தில் சிலம்புங்கையுமாய் வகுளாவலிகை வந்து, அவற்றை அவள் பாதங்களில் அணிந்து செம்பஞ்சுக்குழம்பு ஊட்டிக்கொண்டே மெல்ல மெல்ல அரசன் கருத்தைக்காட்டி அலங்கரித்துப்பிறகு, "இப்போது உன் பாதமிருக்கும் அழகைப் பார்த்தால் மகாராஜாவின் மடியில் ஏறலாம்படியிருக்கிறது" என்றாள். அதற்கு மாளவிகை: "நீ என் உயிர்ப்பாங்கியாயிருந்தும் என்னபேச்சு பேசுகிறாய். முடவன் கொம்புத்தேனுக்கு ஆசைப்படுவது போல் கிட்டாத பொருளில் ஆசைவைப்பது தகுமோ வீணாய் ஆசைமூட்டாதே" என: அதுகேட்டு அவள் "என் அன்பாகிய பொற்கொடியே! நீ அப்படி நினையாதே; இந்நாளில் மகாராஜாவின் மேனியைப் பார்த்தால் நான்சொல்

லியது மெய்யென்றும் பொய்யென்றும் தெரியும். அன்றியும் கவுதமர் என்னிடம் வந்து அரசன் கருத்தைச் சொல்லிப்போனார். உன் அங்கம் அமைந்திருக்கிற அமைப்பும், உனக்கு அப்படிப்பட்ட பாக்கியம் வரக் கூடியதாயிருக்கிறது" என்று நியாயமெடுத்துக்காட்டினாள். அதுகேட்டு மாளவிகை "தோழி! நீ சொல்லுகிறபடியே ஆகட்டும், தாரிணிதேவியை நினைத்துப்பார்; என்கருத்தாலும்பிறர் கருத்தாலும் எப்படி நிறைவேறும் சொல்" என்றாள். இவ்விதம் அவர்கள் பேசிக்கொண்டிருந்ததை விதூஷகன் அரசனுக்கு நிதரிசனப்படுத்த, அரசன் அதனாலே நம்பிக்கைகொண்டு காதற்பெருக்கத்தால் தவித்துக்கொண்டேயிருந்தான்.

அப்போது இராவதியானவள் நிபுணிகை என்கிற தன் வேலைக்காரியோடு அத்தோட்டத்தில் ஊசலாடு மண்டபத்தண்டை வந்து மதத்தால் தள்ளாடிக்கொண்டு, 'என் பிரியநாயகன் எங்கே' யென்று தேடிவருகையில், அந்த நிபுணிகையானவள்: "அம்மா நாம் மல்லிகைமலரைத் தேடுகையில் ஒரு கட்டெறும்பு காணப்படுகிறது" என்றாள். அதென்னவென்று இராவதி கேட்க, மாளவிகையைக் காட்டினாள். அவளைக்கண்டு இராவதியானவள், 'இந்தச்சிறுக்கி இங்கே வரவேண்டிய காரணம் என்ன' வென்று சற்றுநேரம் திகைத்து, மாளவிகையும் தோழியும் பேசிக்கொண்டுவந்ததைக்கேட்டு, "ஓகோ, சரிதான்; தேவியார்க்குக் கால் சொஸ்தமில்லாமையால் அசோகத்திற்குத் தோகதம் கொடுப்பதற்காக இவளை அனுப்பினாற்போல் காண்கிறது. இல்லாவிட்டால், தேவியார் தம் பாதச் சிலம்பை இவ்வூழியச்சிறுக்கிக்கு அணியக் கொடுப்பாரா? ஆகிலும் நடப்பதைப்பார்ப்போம்" என்று கொடிகளின் மறைவில் உட்கார்ந்திருந்தாள்.

அங்கே மாளவிகையைப் பார்த்து அவள் தோழி: "பாதத்தின் அலங்காரம் முடிந்தது; எழுந்திருந்து தேவியார் சட்டளையைநிறைவேற்றக்கடவாய்" எனவே, அவள் எழுந்திருந்து. மரத்தை உதைத்துநின்று, பாங்கியைப் பார்த்து: "நான்செய்யவேண்டியதைச் செய்துவிட்டேன்; இனி அது மலரெடுக்காமற்போனல் நான் என்னசெய்வேன்" என்றுள். அதற்கு வகுளாவலிகை: "நீ இந்தப்பாதத்தால் உதைத்தது அதற்கு ஒரு வெகுமதி. நீ விரும்பிச்செய்த இந்த வெகுமானத்தைப் பெற்று உன் கருத்துக்கு இணங்கி அது நடவாமற்போனல், அப்படிப்பட்ட பொருள் உலகத்திலிருந்து பயனென்ன" என்று வேடிக்கையாய்ப் பேசிக்கொண்டிருக்கையில், கவுதமன்: "இது நாம் எதிரேபோகத் தருணம், வாரும்" என: ராஜாவும் விதூஷகனும் அக்கன்னியர்க்கு எதிரிற்போய் நின்றார்கள்.

இவர்களைக் கண்டு மாளவிகை திடுக்கிட்டுக் கொஞ்சம் நடுக்கமுற்றுத் தலையிறங்கி நிற்க, விதூஷகன் அவளைப் பார்த்துப் பரிகாசமாய், "நீ என்ன பெண்ணே, சிறிதும் அச்சமில்லாமல் காலைத் தூக்கித் தூக்கி உதைத்தாயே" என்று கூற, அவள் ஒன்றும் பேசமாட்டாமற் சும்மாநிற்கையில், வகுளாவலிகையானவள்: "ஐய, இப்பேதைமேற் குற்றமில்லை; ராணியவர்கள் உத்தரவின்படிச் செய்தாள்; குற்றமாயினும் பொறுக்கவேண்டும்" என்று மாளவிகையை அரசன் பாதங்களில் விழச்சொன்னாள். காலில் வீழ்ந்த அந்தக் கன்னியை ராஜன் மிகுந்த காதலோடு கைநடுங்கத் தூக்கியெடுத்து: "பயப்படாதே, உன்மேற் குற்றமில்லை" என்றுரைத்தான். இங்ஙனம் வாய்த்தது அரசனுக்கு ஒரு பெரும்பேறு யிருந்தது. உடனே மாளவிகை, தோழியைப்பார்த்து "நாம் வந்தவேலை தீர்ந்ததே, இனிப்போவோம் வா" என்றழைக்க: அவள் "மகா

ராஜா அவர்களிடத்தில் விடை பெற்றுக்கொள்" என்றவுடனே, அரசன், எதிரில் தலையிறங்கி நிற்கின்ற மாளவிகையைப் பார்த்து: "பெண்கள் திலகமே! போய்வரலாம். ஒன்று கேட்டுக்கொள்ளுகிறேன்; இவ்வசோகமரம் மலரொடாமல் மழுங்கிக் கிடந்ததற்காக நீ வந்து அதனைச் சீர்ப்படுத்தியதுபோல, மனமலராமல் மழுங்கிக்கிடக்கின்ற என்னையும் கையால் பரிசித்து மலரச்செய்யவேண்டும்" என்றுவேண்டினான். அந்தச் செவியுற்று மாளவிகையும் அவள் பாங்கியும் புன்னகைகொண்டு தலையிறங்கி நின்றார்கள்.

அப்போ இராவதியானவள் மனம்புழுங்கிப் புதரிலிருந்து ஒரு பாம்பு புறப்பட்டாற்போலே சீறிக்கொண்டு, கண்சிவக்க உதடு துடிக்க அங்கே வந்து, "அடி சிறுக்கி! நம் ஐயருக்கும் மனமலரும்படி தோகதம்கொடு. அசோகு பூமாத்திர மல்லவோ தரும்; இவர் பலனுந்தருவார்" என்று உருமிச்சொல்லி, வகுளாவலிகையை நோக்கி: "நீ நல்ல சாமர்த்தியக்காரி, நல்ல காரியத்திற்கு எத்தனஞ் செய்தாய்; உன் யுக்திக்கு மெச்சிக்கொண்டேன். ஐயர் கிருபையால் நற்பயனைப்பெறுவா" யென்று அதட்டினாள்; அப்போது யாவரும் இராவதியைப் பார்த்து நடுங்கிப்போனார்கள். மாளவிகையும் வகுளாவலிகையும் சொல் தழுதழுக்க இராவதியைப்பார்த்து: "அம்மா, மன்னிக்கவேண்டும்; ஐயா கிட்டவரத்தான் நாங்கள் பாத்திரமாவோமோ; தேவியார் கட்டளையை நிறைவேற்ற வந்தவிடத்தில் ஐயரவர்கள் தற்செயலாய் வந்து ஊழியக்காரிகளைப் பரிகாசஞ்செய்ததால், தாக்ஷிணியத்துக்குச் சற்றுக்கேட்டுக்கொண்டு நின்றோமே யல்லது, வேறில்லை" யென்று சொல்லிச் சரேலென்று புறப்பட்டுப் போய்விட்டார்கள்.

அரசனே இராவதியின் கிட்ட வந்து, "என் ஆசைக் கிளியே! நீ விரும்பியபடி ஊசலாட நான் வந்து, உன் னைப் பார்த்துக் காணாமையால் அங்கங்கே உலாவித் திரி கையில், இந்தச் சிறுமிகள் இங்கே என்னவோ செய்து கொண்டிருந்ததைப்பார்த்துப் பொழுதுபோக்காய்ப் பரி காசஞ் செய்துகொண்டிருந்தேன்; இதை நீ விபரீதமாய் என்னைக் கோபிப்பது தகுதியல்லவே. ஒருவேளை அது குற்றமென்று உனக்குத் தோன்றினும் பொறுத்துக் கொள்ளவேண்டும். இதோ கையெடுத்துக் கும்பிடுகி றேன்; ஊசலாடுவோம் வா" என வெகுவாய் வேண்டியும், அவள் கோபம் அடங்காமல், "நீ கும்பிடுகிறதற்குப் பாத் திரமானவள் வேறிருக்கிறாள்; நானேதுக்கு! உனக்கு இத்தோட்டத்தில் பொழுதுபோக்க ஒரு பொருள் கிடைத்தது தெரிந்திருந்தால், நான் இங்கே வரவுமாட் டேன்; உன் விநோதத்திற்கு இடையூறு செய்யவுமாட் டேன். என்னை ஏன் வீணாய் ஆயாசப்படுத்துகிறாய்" என்று கூறி வேகமாய்ச் சென்றாள். செல்லுகையில், அவிழ்ந்து வீழ்ந்து காலில் மாட்டிக்கொண்ட அரைநாண் மாலையையும் பாராமல் விசிறி எறிந்துவிட்டுப் போனாள். அரசன் அவ்வரைநாண்மாலையை எடுத்துக்கொண்டு பின்னேபோய், "அடி என் கண்ணே! என்னைத் துறந்தா லும் இதனைத் துறப்பானேன்; உன்னைவிட்டுப் பிரியாத இதுவும் அபராதியோ; ஆதலால் இதனை அணிந்து கொள்" என்று கையைப் பிடித்துக் கொடுக்கவும் அவள் தள்ளிவிட்டுச் சரேலென்று போய்விட்டாள். கவுதமனும் அவளைப் பார்த்து: "என்ன உன் பொறுமை; தேவி யின் பரிஜனங்களோடு வேடிக்கையாய்ப் பேசவுங் கூடா தா? இதைக் குற்றமென்றால் நீதான் குற்றமுள்ளவளாகி றாய்" என்று சொல்லிவிட்டு, அரசனைப்பார்த்து: "ஐயா, ராஜாவே! இவள் போகட்டும்; தேவிக்குக் கால் எப்படி

யிருக்கிறதோ விசாரிப்போம் வாரும்" என்று சொல்லி, ராஜனை இட்டுக்கொண்டு போய்விட்டான்.

கோபித்துக்கொண்டு போன இராவதி அப்படியே தாரிணியண்டை போய், அவளுடைய காலின் சுகத்தை விசாரித்துப் பேசிக்கொண்டிருக்கையில், தாரிணி, "நம் முடைய காதலர் இப்போது என்னசெய்கிறார் தெரியுமோ?" என்று வினவ: இராவதியானவள், "நீர் நம்முடைய காதலர் என்கிறீர்; காதல் நம் வேலைக்காரிமேல் போய்ச் சேர்ந்துவிட்டது" என்று உறுத்திச் சொன்னாள்.

அதைக்கேட்டு தேவியானவள் இது மாளவிகையைப் பற்றிய பேச்சென்று தெரிந்துகொண்டு இராவதியை நோக்கி, "அந்தச் சிறுக்கியை ஆட்டத்திற்கென்று சாக்கிட்டு அழைப்பித்தபோதே இப்படியாகுமென்று நான் நினைத்தது தான்" எனச்சொல்லி அவளை அனுப்பிவிட்டு, மாளவிகையையும் அவள் பாங்கியையும் சூரியனைக் காணாத பாதாளவீட்டறையில் சிறைவைத்து, மாதவியென்பவளைக் காவற்காரியாக்கி, தன் முத்திரை மோதிரத்தைக் கண்டாலல்லது அவர்களை விடவேண்டாமென்று உறுதியாய்க் கட்டளையிட்டாள்.

அக்கினிமித்திரனும் கவுதமனாலே இச்செய்தியை அறிந்து, "ஐயோ! நமக்காக அந்தக் கன்னிகளுக்கு இப்படிப்பட்ட நிர்ப்பந்தம் நேர்ந்ததே, என்னசெய்வோம்; இராவதியின் பொறாமை எவ்வளவுதூரம் போயிற்று பார்த்தையா" என்று விசனப்பட்டு, கவுதமனைநோக்கி: "ஐயா, இதற்கேதாகிலும் உபாயமுண்டா? நீ தான் யோசித்துச் செய்யவேண்டும்" என்று சொல்ல, அவனும் சிறிதுநேரம் யோசித்து, 'நல்லது, தேவியின் முத்திரை மோதிரத்தை வாங்க நான் ஒரு தந்திரம் செய்கிறேன்'

என்று அதன் விவரத்தையெல்லாம் அரசனுக்குச் சொன்னான். அரசன் அதுகேட்டு, "இது நல்ல உபாயந்தான்; தவறுமற் பயன்படும். அப்படியே செய்யக்கடவாய்" என்றனுப்பவிட்டு, தேவியின் பாதசவுக்கியத்தை விசாரிப்பதற்குச் சென்று, அவளோடு குளிர்ந்த பேச்சுகளைப் பேசிக்கொண்டிருந்தான்.

இதற்குள்ளே விதூஷகன் செய்த தந்திரமாவது: விரலை முள்ளால் கீறிக்கொண்டு, பூணூலால் அதனைச் சுற்றிக்கொண்டு வாயுலர்ந்து முகம்வாடிக் கண்சுழலமிடச் சோர்ந்து தள்ளாடிக்கொண்டு, அரசனும் அரசியும் பேசிக்கொண்டிருக்குமிடத்தில் வந்து, "ஐயோ! கெட்டேன்" என்று வீழ்ந்தான். அவர்கள், "என்ன, என்ன! சொல்லப்பா, பயப்படாதே" என்றனர். அவன் "தேவியாரைச் சுகம் விசாரிக்க வெறுங்கையோடு போகலாகாதே என்று தோட்டத்திற் போய்ப் பூங்கொத்து ஒடித்தேன்; ஐயோ! அங்கே மரப்பொந்திலிருந்து மிருத்துபோலே ஒரு பாம்பு புறப்பட்டு விரலிற் கடித்தது; என்னசெய்வேன், இதோ, பல்பட்ட காயம் பாருங்கள்" என்று தழதழத்த குரலோடு பொறுத்துப்பொறுத்து ஒவ்வொரு சொல்லாய்ச் சொல்லி மூர்ச்சித்தவன்போற் கிடந்தான். அதைப் பார்த்து ராணி, "ஐயோ பாவம், ஏழைப் பார்ப்பான்! ஏதோ நம்மையடுத்துப் பிழைத்துக்கொண்டிருந்தான்; கடைசியில் எனக்காகப் போயல்லவோ இந்த ஆபத்தை யடைந்தான். இந்தப் பழிக்கு நான் ஆளாகாமல் சுவாமி இவனை ரக்ஷிக்கவேண்டும்" என்று மிகவும் இரக்கங் கொண்டு, "சீக்கிரம் இவனுக்குத் தகுந்த சிகிச்சை செய்வியுங்கள்" என்றாள். பண்டித கவுசிகி முதலானவர்களும் அப்படியே பேசினார்கள். ராஜாவும் சிகிச்சை செய்விக்கிறேனென்று ஜயசேனை என்பவளைக் கூப்பிட்டு, "நம்மு

டைய விஷவைத்தியனை துருவசித்தியைச் சீக்கிரம் இட்டுக்கொண்டுவா" என்று அனுப்பினான். அவளும் போய்க் கூப்பிட, அந்த வைத்தியன், "விஷந்தீண்டினவனை இங்கேயே கொண்டுவரவேண்டும்; அன்றியும் நாகமணிபதித்த நாகமுத்திரை மோதிரமும் வேண்டும்; அதைச் சம்பாதியுங்கள். அந்த மோதிரத்தை ஜலகும்பத்தில் வைத்து மருந்துகொடுத்தால்தான் விஷம்நீங்கும்" என்று சொல்லியனுப்பினான். இப்படி ஜயசேனை பரிகாரியன்டை போய் வருவதற்குள்ளே கோதமன், "ஐயோ! என்னுடம்பு என்னவோசெய்கிறது; நான் பிழைக்கமாட்டேன். மகாராஜாவே, சிறுபொழுது முதல் உம்மை நான் அடுத்திருந்ததற்காக நீர் என் தாயாரைக் காப்பாற்றிக் கரைசேர்க்க வேண்டுகிறேன். அவள் வெகு வயதுசென்றவள். மிகத் தள்ளாதவள், அவளுக்கு நான் ஒரே மகன். கடைசியில் அவளுக்கு என்னால் துக்கங் கிடைத்ததேயன்றி வேறொன்றுமில்லை. அம்மா, தேவியாரே! ஏதோ நான் தெரிந்தும் தெரியாமலும் செய்த குற்றங்களை மறந்துபோகும்படி பிரார்த்திக்கிறேன்!" என்று இவ்வாறு பரிதாபமான பல பேச்சுகளைச் சோர்ந்து சோர்ந்து பேசி, கண்களில் நீர் வடிய இருந்தான். அரசியும் மற்றுமுள்ளோரும் மனமுருகிக் கண்ணீர் சோர, 'அப்பா பயப்படாதே' என்று அவனைத் தடவி ஆறுதல் சொல்லி, வைத்தியன் இன்னம் வரவில்லையே என்று பார்த்துக்கொண்டிருக்கையில், ஜயசேனை இரைக்கஇரைக்க ஓடிவந்து, பண்டிதர் இப்படிச் சொன்னாரென்று தெரிவித்தாள். தேவியானவள், "மோதிரம் தேடவேண்டாம், என்னிடத்திலேயே இருக்கின்றது! இதோ தருகிறேன்" என்று தன் முத்திரை மோதிரத்தை ஜயசேனை கையில் கொடுத்து, "ஜயசேனாய்! நீ இவனைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு பண்டிதனிடம் சேர்த்து சிகிச்சைசெய்வித்து, அதனால் அவ

னுக்கு உண்டாகும் சுகத்தை எனக்குத் தெரியப்படுத்தக் கடவாய்" என்று கட்டளையிட்டு அனுப்பினுள்.

உடனே ஜயசேனையானவள், கண்சொருக கால் தள்ளாட வருந்தி நடக்கிற கோதமனைப் பிடித்துக்கொண்டு போய்ப் பண்டிதன் வீட்டில் விட்டுச் சற்றுநேரம் பொறுத்து ஓடிவந்து, "விதூஷகனுக்கு விஷம் இறங்கிவிட்டது" என்று கூறினுள். அதைக்கேட்டுத் தாரிணிமுதலான யாவரும் சந்தோஷப்பட்டார்கள். இந்த வைத்தியனும் அந்த ஜயசேனையும் விதூஷகன் செய்யும் கள்ளத்திற் குட்பட்டவர்கள்.

இவ்வாறிருக்கையில், மந்திரியானவன் ராஜகாரிய நிமித்தம் ராஜாவைக் காணவேண்டி யிருக்கிறதென்று அனுப்பிய கடிதம் அங்கே வந்தது; அது விதூஷகன் செய்த மாயம் பலித்ததைக் காணும்பொருட்டு எழுந்து போக எண்ணிய அரசற்குச் சகாயமாயிற்று. தாரிணியும் துரைத்தன காரியநிமித்தம் சீக்கிரம் போகும்படித் தன் புருஷனுக்குச் சொன்னுள். அவளும் சொல்லவே, ராஜா வெகு குதூகலத்தோடெழுந்து, "இவ்விடம் சவுக்கியம் போதாமையால் வேறிடத்தில் படுத்திருக்கக் கோருகிறேன்" என்று தன் நாயகிக்குப் பிரியவசனஞ்சொல்லி, சற்றேற பொறுத்து வருகிறேனெனத் தந்திரமாய் மந்திரிக்குச் செய்தியனுப்பிவிட்டு ஜயசேனையைக் கூப்பிட்டு, "ரகசியமான வழியால் என்னைத் தோட்டத்தில், கொண்டு போய் விடக்கடவாய்" என்று சொல்ல, அவள் அப்படியே வழிகாட்டியதனுல் உத்தியானவனம்போய்ச் சேர்ந்தான்.

வைத்தியன் வீட்டுக்குப்போன விதூஷகன் அந்த மோதிரத்தைக் கையிலெடுத்துக்கொண்டுபோய், காவற்காரியான மாதவிக்குக் காட்டி, "மாளவிகையையும் வகு

ளாவலிகையையும் தேவியார் காவலிலிருந்து விடும்படி கட்டளையிட்டார்" என்ருன். அதற்கு மாதவிகை, "கோதமரே, கோபத்தோடு நிர்ப்பந்தமான காவலில் வைத்தவர்களை யாதுகாரணத்தால் இப்போது தேவியார் விடச் சொன்னர்?" என்று வினவினள். அவன் "மகாராஜாவினுடைய நக்ஷத்திரத்திற்குக் கொடுமையான கிரகத்தால் ஏதோ துன்பம் நேரிட்டதென்றும், அதற்குக் காவலிலிருப்பவரையெல்லாம் விடுதலைசெய்ய வேண்டுமென்றும் சோதிடசாஸ்திரிகள் சொன்னதனுல், மகாராஜாவானவர் இச்செய்தியைத் தேவியார்க்குத் தெரிவித்து அவர் கட்டளையை மோதிரத்தோடு என் வசமாக்கி அனுப்பினர்" என்ருன். அதற்கு, அந்தக் காவற்காரி, 'சரிதான்' என்று ஒத்துக்கொண்டு அவ்விரு கன்னியரையும் காவல் நீக்கி விட்டாள். விதூஷகன் அந்தப் பெண்களிருவரையும் உத்தியானவனத்தில் 'சமுத்திரகிரகம்' என்கிற மண்டபத்தண்டையில் வரும்படி குறித்துவிட்டு, ராஜாவினிடம் வந்து நடந்த காரியங்களைத் தெரியப்படுத்தினுன்.

அதுகேட்டு ராஜா வெகு சந்தோஷமுற்றவனுய் அவனைக் கட்டிக்கொண்டு, "தோழா, உன் சமார்த்தியத்திற்கும் புத்திக்கும் மிக மெச்சுகின்றேன். நீ எனக்கு உயிர்தந்தவன்போலானுய்; நல்லது, இப்பொழுது நாம் செய்யவேண்டுவதென்ன" என்று கேட்க, விதூஷகன் "சமுத்திர கிரகத்துக்குப் போவோம் வாரும்" என்று அழைத்துக்கொண்டு போனுன். அப்போது கவுதமன் புளுகினதற்குச் சரியாய் அரசனுடைய நக்ஷத்திரத்திற்குக் கிரகதோஷம் கொஞ்சமிருந்து நீங்கிவிட்டதாகச் சோதிட நூலின்படிக் காணப்பட்டதனுல், ராஜா தன் நக்ஷத்திரத்திற்கு நேர்ந்த கொடுமையையும், அதற்காகச் சிறைவைத்தவர்களை விடுவிப்பது அவசிய மென்றும்

தாரிணிக்குத் தெரியப்படுத்தி அவள் சம்மதியைப் பெற்றுக்கொண்டான். இப்படி அரசன் சமுத்திரகிரகத்தின் அருகில் போய்க்கொண்டிருக்கையில் இராவதியின் பாங்கியாகிய சந்திரிகையென்பவள் அங்கே தற்செயலாய் வரக் கண்டு திடுக்கிட்டு "பிள்ளையார் கலியாணத்துக்குப் பதினாயிரம் இடையூறு" என்பதுபோல், நமக்கு இந்தக் காரியத்திற்கு விக்கினத்தின்மேல் விக்கினம் வந்துகொண்டேயிருக்கின்றது. இதிருக்கட்டும், இப்போ இவள் கண்ணுக்குத் தப்பவேண்டுமே என்னசெய்யலாம்" என்று தோழனை வினவினன். அவன், திருடனுக்குச் *சந்திரிகை விரோதிதான் என்று பரிகாசமாய்ப் பேசி, "இப்படி வாரும், இந்தச் சுவர்ப்புறத்தில் மறைந்திருப்போம்" என்ன, அரசனும் அப்படியே அம்மண்டபத்தின் சுவர்ப்புறத்தில் மறைந்து அங்கொரு சாளரத்தின் துவாரத்தால் பார்த்துக்கொண்டிருந்தான்.

விதூஷகன் பேச்சின்படி சமுத்திர கிரகத்துக்கு அந்தப் பெண்களிருவரும் முன்னிட்டே வந்திருந்தார்கள். வகுளாவலிகை மாளவிகையைப் பார்த்து: "அதோ மகாராஜா இருக்கிறார், கும்பிடு" என்ன, அவளும் கும்பிடப் பார்த்து, எதிரில் ஒருவருமில்லாமையால், "பாங்கி! என்னை மோசஞ்செய்கிறையோ" என்று வெறுக்க, அவள்: "இல்லையே, எதிரில் சித்திரத்திற் பார்" என்று காட்டினள். அதைப் பார்த்து மாளவிகை புன்சிரிப்போடு கும்பிட்டுத் தோழியைப் பார்த்து: "நம் ஐயர் பக்கத்தில் பிணங்கி முறைப்பாய் நிற்கின்றாளே அவள் யார்?" என்று கேட்க, "அவள்தான் இராவதி" யென்று தோழி சொல்லியதன்மேல், அவள் அப்படி நின்றும் அவனை வணங்கி "அன்போடு நம்மையர் பார்ப்பதென்?" என்று மறுபடியும்

* நிலா.

வினவ, "அவளிடத்து ஐயருக்கு மிக்க, அன்புண்டு" என்று வகுளாவலிகை சொன்னவுடனே, மாளவிகை "அப்படியாகில்நான்என் என்னை ஆயாசப்படுத்க்கொள்ள வேண்டும்" என்று முகங்கோட்டித் திரும்பினள். அதற்கு வகுளாவலிகை நகைத்து, "சித்திரத்திலிருப்பதைக் கண்டு நீ வெறுப்பது நியாயமாமோ" என்று சமாதானஞ் சொல்லிக்கொண்டேயிருக்கையில், வேந்தன் தோழனுக்கு இதைக்காட்டி அவனோடுகூடச் சரேலென்று மாளவிகைக்கு எதிரில் வந்து நின்று, "என் ஆசைக்கண்ணாட்டி, உன் தோழி சொன்னபடி நான் இராவதிக்கு அன்பனே, உனக்கோ அடிமை; நீ முகங்கோட்டி வெறுப்பதேன்" என்று கெஞ்சிப் பேசினன். அக்கன்னியரிருவரும் அரசனைக் கண்டு திகைத்ததுபோலே கும்பிட்டு வணக்கமாய் நிற்க, ராஜாவானவன் ஒன்றும் பேசாமல் தலையிறங்கி நிற்கிற மாளவிகையைப் பார்த்துப் பரிகாசமாய்ச் சிலபேச்சுகள் பேசிகொண்டிருக்கையில், விதூஷகன் வகுளாவலிகையைப் பார்த்து: "தோழி அதோபார், ஒரு மான்குட்டி நன்றாய்ப் பூத்திருக்கிற அந்த மரத்தைத் தாண்டிக் குதிக்கப் பார்க்கின்றது; அதை நாம் தடுப்போம் வா" என்ன, அவளும் "ஆம் நாம் செய்யவேண்டுவதுதான்" என்று ஒத்துக்கொள்ள, இருவரும் புறத்தே போய்விட்டார்கள். வெளியில் வந்த கவுதமன் வாசற்புறத்துத் திண்ணைமேல் உட்கார்ந்து இடமும் காற்றுமிருந்த நலத்தினல் அப்படியே தூங்கிப்போனன்.

உள்ளே ராஜா மாளவிகையின் கிட்டப்போகையில் அவள் விலகிப்போய் முகம்வாடி உடம்புநடுங்கி நின்றாள். அரசன், "என் கண்மணியே, நீ என்ன காரணத்தினல் இப்படி நடுங்கித் திகிற்பட்டவள்போற் காண்கின்றாய்?" என்று வினவ, அவள் "தேவியாரை நினைக்க இங்ஙனம்

அச்சமுண்டாகின்றது" என்றாள். அதற்கு ராஜாவானவன், "நீ ஏன் பயப்படுகின்றாய், நானிருக்கிறேன்" என்று சமாதானப்படுத்த, மாளவிகை புன்னகைகொண்டு, "ஐயர் தைரியத்தை இராவதிக்குளதிரிற் கண்டேன்" என்றாள். "பெண்மணியே, அது அச்சத்தினாலன்று, தாக்ஷிணியத்தினாலே" என்று இப்படி அரசன் வேடிக்கையாய்ப் பேசிக்கொண்டிருக்கையில் இராவதி யானவள், 'கவுதமனைத் தோட்டத்தண்டை கண்டேன்' என்று தன் தோழி சொல்லியதைக் கேட்டு, அவன் விஷம் தீண்டிச் சுகப்பட்டதை விசாரித்தாற்போலாகிறது; நாமும் விநோதமாய் உத்தியானவனத்துக்குப் போவோமென்று தோழியுடன் சமுத்திர கிரகத்தினருகில் வருகையில், திண்ணைமேல் உட்கார்ந்து தூங்குகிற கோதமனைக் கண்டாள். அவன் அப்படித் தூங்குகையில், "ஓ, மாளவிகாய்! நீ இராவதிக்கு மேம்பட்டவளாய்விடு" என்று வாய்பிதற்றிக்கொண்டிருந்ததனால் அவள் மனமுறிந்து, இவனைப் பாம்புபிடிங்கினாற்றான் என்ன, இவன் தலையில் இடிவீழ்ந்தாற்றான் என்ன; உள்ளத்தனைகாலமும் நம்மிடத்தில் பாயசமும் லட்டுமாய்த் தின்றுவிட்டு மனதிலே துரோகம் நினைக்கிறான் பார்" என்று தோழியோடே சொல்லிக்கொண்டே சமீபத்தில் வந்து, தடித்து வளைந்திருக்கிற ஒரு கொடியை எடுத்து அவன்மேல் எறிந்தாள். எறியவே, அவன்: "ஐயோ, ஐயோ! மேலே பாம்பு விழுந்ததே" என்றலறிக்கொண்டு கண்விழித்துப் பார்த்து, அது கொடியாயிருந்ததனால் நகைத்து, "முன்னே நான் முள்ளாலே விரலைக் கீறிக்கொண்டு பாம்புகடித்ததென்று மாயம் பேசினேனே, இப்போது மெய்யாகத்தான் விழுந்ததோ என்று பயப்பட்டேன்; கொடியா போ" என்று தனக்குத்தானே சொல்லிக்கொண்டான். இதைக் கேட்டதும் இராவதி, "பார்த்தையா இவன் செய்த மாயத்தை;

எதுவோ ஒரு கிரித்திரமத்துக்காகத்தான் இப்படிச் செய்திருக்கவேண்டும்" என்று தோழியோடு பேசிக்கொண்டேயிருக்கையில், 'ஐயோ பாம்புவிழுந்த' தென்கிற குரலைக் கேட்டு உள்ளேயிருந்த ராஜாவும் அவன் புதுமனைவியும் வெளியில் ஓடிவந்தார்கள். அப்பொழுது இராவதி எதிர்ப்பட்டுவந்து, "நம் ஐயருக்கு மனோரதம் இடையூறின்றி நிறைவேறிற்றா?" என்றாள். அவளைக்கண்டு யாவரும் திடுக்கிட்டார்கள். ராஜா இப்போ தென்னசெய்யலாமென்று கண்சைகையால் விதூஷகனைக் கேட்க, அவனும் 'அஞ்சாதேயும்' என்று கையமர்த்தி இராவதியை நோக்கி, "தோழீ! நீதான் நாயகிமாரில் உத்தமி. யாதொரு குற்றமுமில்லாதிருக்க ஐயர்மேல் வீண்குற்றங் கற்பித்துக்கொண்டு அவரை வெருட்டி, அவர் பின்னேவந்து கும்பிடுகிறேனென்னவும் மனந்தளராமல் மிடுக்காய்ப் போனையே, இது நற்பெண்டிர் நடக்கையோ? அதனோடு போகாமல் மறுபடி வெருட்டவந்தையோ? மிகவும் நன்றாயிருக்கின்றது! இவர் உன்னுசை தலைக்கொண்டு மயங்கிக்கிடக்கிறதனால் நீ எதுசெய்தாலும் செய்யலாம்" என்றான். அரசனும், "என் காதற்கொடியே, இன்னமும் உனக்கு இந்த வீண் எண்ணம் ஒழியவில்லையா? இந்தச் சிறுமியர்க்கு நான் காவல் விடுவித்தேனுதலால் என்னைக் கும்பிட இவ்விடம் வந்தார்கள். இதை நீ வேறுகநினைப்பதேன்?" என்றுரைக்க, அவள்: "ஆம், என் எண்ணம் வீண்தான்; அதனால் யாருக்கு என்னவிரோதம்" என்று மொறுமொறுத்தே பேசித் தோழியோடுகூடப் போகப் புறப்பட்டாள். அப்போது தேவி அனுப்பிய தூதி ஒருத்தி இராவதியண்டை வந்து "நம் ஐயர் நக்ஷத்திரத்திற்குத் தோஷம் நேரிட்டதனால் மாளவிகையையும் வகுளாவலிகையையும் காவலிலிருந்து விடுவித்தேன்; இப்படிச் செய்யவேண்டுவது நமக்கு அவசியமான காரிய

மாகையால், நீயும் அதனைச் சம்மதிக்க வேண்டுமென்று தேவியாரவர்கள் சொல்லச் சொன்னார்கள்" என்று சொல்லக்கேட்டு, "தேவியார் திருவுள்ளப்படி நடக்க நான் தடைசெய்வேனோ, அவர் சுதந்தரமுள்ளவர்" என்று சொல்லிப் போய்க்கொண்டேயிருந்தாள்.

மாளவிகை, இனி என்ன நடக்குமோவென்று அச்சமுற்று நிற்க. அரசனும் மயங்கிக்கொண்டிருக்க, அந்தப்புர வேலைக்காரி யொருத்தி இரைக்க இரைக்க ஓடிவந்து "ஐயா சுவாமி! நம்முடைய வசுலக்ஷ்மியை அந்தப்புரத்தில் கட்டியிருந்த பொன்வண்ணக்குரங்கு வெருட்டியதனால், குழந்தை வெருண்டு கைகால் நடுங்க ஞாபகந்தப்பிப் பெருமாட்டியார் மடியில் படுத்திருக்கின்றது. இதை ஐயருக்குத் தெரிவிக்கும்படி கட்டளையிட்டார்கள்" என்றாள். அதைக் கேட்கவே இராவதியும் விசனமுற்றுக் குழந்தையைத் தேற்றச் சீக்கிரம் போவோமென்று அரசன் கிட்டவர, அரசனும் மற்றவர்களும் அந்தப்புரஞ் சேர்ந்தார்கள். மாளவிகையும் தோழியோடு அங்கேயே போய்ச்சேர்ந்தாள். அன்றைத்தினம் யாவர்க்கும் ராஜகுமாரியைத் தேற்றுவதிலே காலஞ்சென்றது. விதூஷகனும், 'பொன்வண்ணக்குரங்கு நல்ல காரியஞ்செய்தது; இராவதியின் பிணக்கைப்போக்கி ராஜாவுக்குச் சமாதானஞ்செய்தது' என்று சந்தோஷித்துக்கொண்டேபோய்க் குழந்தையை விசாரித்துவிட்டுத் தன்னிடஞ் சேர்ந்தான்.

இப்படி அந்தத் தினம் கழிந்து பொழுதுவிடிந்தவுடனே தோட்டக்காரி தோட்டத்தில் பொன்னசோகு பூத்திருப்பதைக் கண்டு களிப்போடு சென்று அதைப் பெருமாட்டிக்கு விண்ணப்பஞ்செய்தாள். அவளும் மிகவும் உவந்து தோட்டக்காரிக்கு வெகுமதிகளளித்துத் தான் அங்கே வருவதாகச் சொல்லி அவளை அனுப்பிவிட்டுத்

தன் குமாரனுகிய வசுமித்திரனுக்கு நன்மைக்காக ஆரம்பித்த விரதம் அன்றைக்கு முடிவானதனுல் செய்யவேண்டிய தானங்கள் பலவுஞ் செய்துகொண்டிருந்தாள். அக்காரியமெல்லாம், முடிந்தபின் "தோட்டத்தில் செவ்வசோகு பூவெடுத்திருக்கிறதுமித்தம் அதைப் பார்க்க நான் அவ்விடம் போக விரும்பியிருக்கிறேன்; அதைத் தனித்துப் பார்த்துக் களிக்க இஷ்டமில்லை; ஐயரும்கூட வந்திருக்கவேண்டுமென்று பிரார்த்திக்கின்றேன்" என்று அரசனுக்குச் சொல்லியனுப்பி, பரிவிராஜிகையை நோக்கி: "நீர் பெண்களுக்குக் கோலஞ்செய்வதில் வல்லமையுடையவர் என்றிருப்பதால், நாம் வசந்தோற்சவத்திற்காகப் *பிரமதவனத்துக்குப் போகும்போது மாளவிகையும்கூடவருவதற்குத்தக்க அலங்காரம் அவளுக்குச் செய்வீராக. அது மணக்கோலம்போலிருக்கவேண்டும்" என்று சொன்னாள். பரிவிராஜிகையும் ஒருவாறு தேவியின் கருத்தைக் குறிப்பாயறிந்து மாளவிகைக்கு மணக்கோலம்செய்தாள்.

இவ்வாறு யாவரும் தோட்டத்திற்போக ஆயத்தமாயிருக்கையில் மந்திரி அனுப்பிய பத்திரிகை ஒன்று அரசனிடம் வந்தது. அதில் எழுதியிருந்தது என்னவெனில், "மகாராஜா அவர்களுடைய கட்டளையின்படி வீரசேனனைத் தலைவனுகக்கொண்ட சேனையானது † விதர்ப்பதேசத்திற் சென்று பகைவன் சேனைகளை முறியடித்து, ராஜ்யத்தைச் சுவாதீனப்படுத்திக்கொண்டது. அரசனும் கைவசப்பட்டிருக்கிறான்; மாதவசேனனும் சிறைவிடுக்கப்

---

* உள்தோட்டம்.

† இப்போ (Beder) பீதர் என்று சொல்லப்படுகிறது. இது மாளவத்தின் ஒரு பிரிவாயிருந்ததுமுண்டு.

பட்டான். இனிச் செய்யவேண்டியதற்கு மகாராஜா அவர்களுடைய கட்டளையை எதிர்பார்க்கிறோம்" என்றெழுதியிருந்ததைப் பார்த்தவுடனே பக்கத்திலிருந்த தன் சிநேகிதனாகிய கவுதமனைப் பார்த்து: "நண்பனே, என் மனம், மாளவிகையைச்சேர்வது மிகக்கடினமாயிருப்பதை நினைத்துத் துக்கத்தையும், விதர்ப்பராஜன் சுவாதீனப்பட்டதைப்பற்றிச் சந்தோஷத்தையும் அடைந்து, நன்றாய் வெய்யில் காய்ந்துகொண்டிருக்கவும், மழைத்தாரை வீழ்ந்துகொண்டிருக்கவும் ஒருதாமரை எந்த நிலையிலிருக்குமோ அந்த நிலையிலிருக்கின்றது" என்று சொல்லிவிட்டு மந்திரிக்கு மறுகட்டளையனுப்பினான். எப்படியென்றால், "ஜயித்த ராஜ்யத்தை நாமே கட்டியாள நமக்கு விருப்பமில்லை. கைவசப்பட்ட பகைவனை வருத்தவும் பிரியமில்லை. அவன் நம்மை எதிர்த்தானென்று தண்டிக்கும்படிதான் சேனையை அனுப்பினோம்; அப்படியே தண்டனை ஆய்விட்டது. ஆகையால் வரதாநதியை நடு எல்லையாக வைத்து, அந்த நாட்டை இருபிரிவாக்கி, நமக்குக் கைவசப்பட்ட யக்கியசேனனுக்கு வடபுறத்தையும் மாதவசேனனுக்குத் தென்புறத்தையும் கொடுத்துவிட வேண்டும்" என்று அனுப்பினான். இக்கட்டளையைக் கண்டதும் மந்திரி அரசனுடைய பேரியல்புக்கு மிகவும் உவந்து அப்படியே நடத்தி, நடத்திய செய்தியை மறுபடியும் அரசனுக்கு எழுதியனுப்பினான்.

அக்கினிமித்திர மகாராஜாவானவன் மந்திரிக்குக் கட்டளையனுப்பிவிட்டு விதூஷகனோடு தாரிணிதேவியின் வேண்டுகோளின்படி தோட்டத்துக்கு வந்து சேர்ந்தான். தேவிமுதலானோரும் அப்படியே வந்து சேர்ந்து யாவரும் பொன்னசோகமரத்தண்டை கூடினார்கள். அப்போது தாரிணி ராஜாவைப்பார்த்துக் கொஞ்சஞ் சிறுநகைப்

போடு "இந்தப் பொன்னசோகு புதிதாய்ப் பூவெடுத்ததனால் ஐயருக்கு ஒரு சங்கீத விநோத மண்டபமாக ஏற்படுத்தப் பட்டிருக்கின்றது" என்றாள். அதற்கு ராஜா: "தேவி! வசந்தத்தால் பூக்காமல் உன் முயற்சியினாற் பூத்த இதற்கு இத்தனை பெருமை செய்யவேண்டுவது நியாயந்தான்" என்று சொல்லிவிட்டுச் சிறிதுதூரத்தில் அலங்காரத்தோடு நின்ற மாளவிகையைக் கண்ணெடுத்துப் பார்க்க அஞ்சிக் கீழ்க்கண்ணாற் பார்த்துப் பெருமூச்செறிந்து கொண்டிருந்தான். விதூஷகன் அங்கே ஒரு மலரை எடுத்து அரசன் சிரமேற்போட்டு, 'இஷ்டசித்தி பெறக்கடவீர்' என்று பரிகாசமாய்ச் சொன்னதுபோற் சொன்னான். அதற்கு ராஜா: "இதென்ன பரிகாசம்" என்று சொல்ல "பரிகாசம் அன்று, நிஜந்தான்; பரிவிராஜிகை இதை எனக்குக் குறிப்பாய் அறிவித்தாள். மாளவிகைக்குச் செய்திருக்குங் கோலத்தைப் பாரும்; மணக்கோலமா யிருக்கவில்லையா" என்று ரகசியமாய்ச் சொன்னான். அதைக்கண்டு தேவி, "கோதமா! என்ன ரகசியம் பேசுகிறாய்" என்றாள்; "தேவியார் மனதிலும் மகாராஜா மனதிலும் இருக்கிற காரியந்தான் வேறல்ல" என்று சொல்லக்கேட்டு உனக்கு எப்படி இதுதெரியும்" என்ன, "நான் சோதிடங் கற்றவனல்லவோ? இன்னஞ் சிறிதுநேரத்தில் வெளிப்படப் போகின்றது பார்" என் றிப்படிப் பேசிக்கொண்டிருக்கையில் ஒருசேவகன் கடிதங்கொண்டு ஓடிவந்தான். அந்தக் கடிதம் அக்கினிமித்திரனுடைய பிதாவாகிய புஷ்யமித்திரன் அனுப்பியது.

அந்தப் புஷ்யமித்திரன் அசுவமேதயாகம் செய்யத் தொடங்கிச் சிறிது தூரமான வேறோரிடத்திலிருந்ததனால் அங்கேயிருந்து எழுதினான். என்ன எழுதியிருந்ததென்றால், "அசுவமேதக் குதிரைக்குக் காவலாக நூறு

ராஜகுமாரர்களோடு தலைவனுக்கி நம்முடைய வசுமித்தி ரனை அனுப்பியிருந்தேனே; அவன் குதிரைபோன விடமெல்லாம் போய்க்கொண்டிருக்கையில் *சிந்துநதி யின் தென்கரையில் பெருத்த குதிரைச்சேனையுள்ளவ னான யவனராஜன் அதைப் பிடித்துக்கொண்டான். அத னால் யவனனுக்கும் நம் பேரனுக்கும் பெரும்போருண் டாகி, அந்த யவனனை நம்முடைய குமாரன் தோற்கடித் துக் குதிரையைக் கொண்டுவந்து சேர்ந்ததனால் சகரமகா ராஜன் அம்சுமானென்கிற பேரனால் யாகத்தை நிறை வேற்றினதுபோலே, நானும் யாகத்தை நிறைவேற்ற எத் தனஞ் செய்திருக்கிறேன். நீ உன் சமுசாரத்தோடு வந் திருந்து யாகத்தை நடத்திப்போகவேண்டும்" என்றெ ழுதியிருந்தது. இதைப் படிக்கையில் யாவரும் கேட்டு ஆனந்தப்பட்டார்கள். தாரிணி: "நான் செய்த நோன் பின் பயனைக் கண்டே" னென்று களிப்புற்றாள்: இந்தக் குமாரன் ஒரு வருஷத்துக்குமுன்னே குதிரையோடு போனவன் க்ஷேமமாய் வரவேண்டுமென்றுதான் தேவி தானதர்மங்களைச் செய்துவந்தது. இந்த நற்செய்தி வந்த வுடனே தேவி, குமாரனுடைய செய்தி தெரியவில்லையே என்று குறைப்பட்டுக்கொண்டிருந்த எனக்கு அசோக நிமித்தமான இந்த வசந்தோற்சவம் வெகு சந்தோஷத் தைக் கொடுத்தது, என்று வாத்தியமுதலான ஆடம்பரங் களெல்லாம் நடத்தினாள். இதுவே கலியாணத்துக்குப் பூர்வாங்கமுமாயிற்று. அச்சமயத்தில் விதூஷகனும் "நான் சொன்னபடி பலித்தது பார்த்தீர்களா" என்று சிரித்துப் பேசினான். அதற்குத் தேவி: "நீ முக்காலமு முணர்ந்த முதியவன். ஆதலால் பலியாமற் போமா" என்று வேடிக்

* அக்காலத்தில் சிந்துதேசம் மேற்கிலிருக்கிற துலுக்கர் கைவசமா யிருந்திருக்கலாம்.

கையாகச் சொல்லி, “இச்செய்தி இராவதிமுதலான யாவர்க்கும் அறிவியுங்கள்” என்று தாதிமாரை அனுப்ப, யாவரும் கேட்டுச் சந்தோஷித்து அங்கே வந்து சேர்ந்தார்கள்.

பின்பு தாரிணியானவள் மாளவிகையைக் கையிற் பிடித்துக்கொண்டு அரசனுக்கருகில் வந்து, “இன்று இவ்வுற்சவத்தில் ஐயர் குமாரனுடைய க்ஷேமத்தை நமக்குத் தெரிவித்ததற்காக இந்தப் பெண்ணைப் பரிசுகொடுக்கிறோம்” என்று அரசன்கையால் மாளவிகையின் கையைப் பிடிப்பித்து, யாவரையும் நோக்கி: “இந்த அசோகமரம் இவள் கொடுக்குந் தோகதத்தினால் ஐந்து தினங்களுக்குள் மலரெடுத்தால் இவளிஷ்டத்தை நிறைவேற்றுகிறேனென்று வாக்குக் கொடுத்திருந்தேன். அப்படியே பூத்தபடியால் இவளை நம் ஐயருக்குக் கொடுத்துவிட்டேன். இவள் மனதில் இக்கருத்து உண்டென்பதை யான் குறிப்பால் அறிந்திருந்தேன்; அதை இன்று நிறைவேற்றிப்போட்டேன்” என்று சொன்னாள். அதுகேட்டுக் கவுசிகியானவள்: “நீ மகா சத்தியவதியானதனால் சொன்னபடிசெய்தா” யென்று கொண்டாடிக் கண்களில் ஆனந்தபாஷ்பம் விட்டாள். அரசன் வெட்கப்பட்டவன் போல் தலையிறங்கிக்கொண்டு தேவியைப் பார்த்து: “நீ சொல்வதெல்லாம் எனக்குக் கட்டளை ஆதலால் மகாப்ரசாதமாக இவளை அங்கீகரித்தேன்” என்றான்.

இப்படியிருக்கையில், விதர்ப்பநாட்டி விருத்து மந்திரியவர்கள் அனுப்பிய இரண்டு கன்னிகைகள் வந்து நிற்கிறார்களெனச் சேவகர் வந்து சொல்ல, உள்ளே வரலாமென்று கட்டளையிடவே அப்படியே அக்கன்னியர்கள் வந்து அரசன்முதலானோரைக் கும்பிட்டு உட்கார்ந்து

மாளவிகையை உற்றுப்பார்த்து: "இவள் நம்முடைய ராஜகுமாரிபோலிருக்கிறதே" என்று ஒருவரோடொருவர் மெல்லப் பேசிக்கொண்டார்கள். ராஜா அந்தப் பெண்களை "நீங்கள் எந்தக் கல்வியில் தேர்ந்தவர்கள்" என்று வினவ, அவர்கள் "சங்கீதவித்தையில்" என்றார்கள். பின்பு தாரிணியை நோக்கி அரசன்: "இவர்களில் ஒருத்தியை நீ வைத்துக்கொள்" என்ன, அவள் மாளவிகையை அழைத்து, இவர்களில் எவள் உனக்குச் சங்கீதத்துணையாய் இருக்கத்தக்கவள், ஆராய்ந்து எடுத்துக்கொள்" என்றாள். அதனால் அவர்கள் கிட்ட நெருங்குகையில், அவர்களும் மாளவிகையும் ஒருவரையொருவர் பார்த்துக் கண்ணீர்விட்டார்கள். அதைக்கண்டு அரசன் "பெண்காள்! நீங்கள் யார்? இவளுக்கும் உங்களுக்கும் சம்பந்தம் என்ன" என்று வினவினான். அதற்கு அவர்கள்: "சுவாமி! இவள் எங்கள் ராஜகுமாரி; தாங்கள் காவலிலிருந்து விடுவித்தீர்களே அந்த மாதவசேனனுடைய தங்கை. ராஜகுமாரன் சிறைப்பட்ட காலத்தில் மந்திரியாகிய சுமதி இவளைக் கூட்டிக்கொண்டு போனார்; இவ்வளவுதான் எங்களுக்குத் தெரியும். பின்பு இவள் எப்படி இங்கே வந்து சேர்ந்தாளோ அது தெரியாது" என்று சொன்னார்கள். மாளவிகை அப்பேது கண்ணீர் விட்டுக் கேவிக்கேவி அழுதுகொண்டிருந்தாள். அத்தருணத்தில் பண்டித கவுசிகி, "மற்றதும் துர்ப்பாக்கியமுள்ள நான் சொல்லுகிறேன்" என்று ஆரம்பித்து, அந்தச் சுமதி என்பவர் தன்னுடைய தமயனார் என்றும், மற்றும் நடந்தவைகளையும் சாங்கோபாங்கமாகச் சொல்லிவிட்டாள்.

இதைக் கேட்டு ராணி விசனமுற்றுக் கவுசிகியைப் பார்த்து: "நீர் இச்சங்கதியை ஏன் அறிவியாமற் போனீர்; ஐயோ, நான் தெரியாமல் நல்ல ரத்தினக்கல்லைக்

காலால் தேய்த்துவந்தேனே" என்று கவுசிகையை வெறுத்து, தான் மாளவிகையை ஆண்டுவந்ததற்காக மனஸ்தாபப்பட்டு, மாளவிகையை அருகில் அழைத்துக் கண்ணீர் துடைத்துத் தேற்றி, "எப்படியாகிலும் ரத்தினம் பொன்னிற் பதிந்ததே" என்று சமாதானஞ்சொல்லி வந்தபெண்களுக்கும் பரிசளித்தாள். அந்தச் சிறுமியர், குரலால் கவுசிகையைத் தெரிந்துகொண்டு கும்பிட்டு: "அம்மா, நீங்களும் இங்கேதானா இருக்கிறீர்கள்?" என்று கேட்க, அவள்: "ஆம்" என்று கண்ணீர்விட்டுத் தாரிணியை நோக்கி: "நீ பெருந்தன்மை யுடையவளாதலால் மாளவிகையை அரசனோடு கூட்டினாய்" என்ன, அவள்: "நான் கூட்டுகிறதென்ன? அவளுடைய குலமும் குணமுமே கூட்டிவைத்தன" என்றாள். அக்கினிமித்திரனும் "ஆதியில் கடவுள் என்ன சங்கற்பித்தாரோ அப்படியே கடைசியில் நிறைவேற்றினார். இடையில் சிறிதுநாள் தடுமாறவேண்டி யிருந்ததுபோலும்" என்று சொல்லித் தன் இஷ்டம் நிறைவேறினவிதத்தை நினைத்து வியப்புங் களிப்புங்கொண்டு உல்லாசமாய் அரண்மனைபோய்ச் சேர்ந்தான்.

யாவரும் அப்படியே அவரவரிடஞ் சென்றார்கள். பின்பு பரிவிராஜிகை ராஜாவையும் ராணியையும் பார்த்து: "உங்கள் நன்மையால் ஒரு வருஷம் இங்கே சுகமாய் இருந்தேன். எங்கள் ராஜபுத்திரியும் நன்னிலையை அடைந்தாள். எல்லாம் சந்தோஷமாய் முடிந்தது. எங்கள் ராஜகுமாரன் உங்கள் தயையால் சிறப்பட்டுத் துரைத்தனஞ் செய்துவருவதனால் அங்கே போக விரும்புகிறேன்" என்றாள். அதற்கு அரசன், "இனி இந்த ராஜ்யத்துக்கும் அந்த ராஜ்யத்துக்கும் பேதமென்ன? நீர் அப்படி நினைக்கவேண்டாம்; அந்த ராஜகுமாரனை வேண்டியிருந்

நால் இங்கேயே அழைப்பிக்கிறேன், நீர் இனி இவ்விடத்திலேயே இரும்" என்று சொல்லித் தந்தையின் யாகத்திற்குப் போயிருந்து வந்த மாதவசேனனை அழைப்பித்து மைத்துனன் முறைகொண்டாடி யாவரையும் தகுந்தபடி உபசாரத்தோடு பரிபாலித்துக்கொண்டு மாளவிகையோடு நெடுநாள் சுகித்திருந்தான்.

முற்றிற்று.

